# நிலை மாறும் உலகில்

## (குறுங்கதைகள்)

**Published by**

**Gauri Sankar**

## Disclaimer

# முன்னுரை

**கதைகள்** மனதில் உள்ள இறுக்கங்களை குறைத்து படிப்பவர்களை வேறு ஒரு உலகத்திற்கு சிறிது நேரத்திற்கு எடுத்துச்செல்பவை.

**இந்த புத்தகத்தில் ஆறு குறுங் கதைகள் அடங்கியுள்ளன**.

தலையணை மந்திரம் - ஓய்வு பெற்ற அரசு ஊழியர் ராஜாமணி, மற்றும் அவரது மனைவி - வேலையில்லாமல் தவிக்கும் முத்தரசுவின் மகன் முருகேசன் - இவர்களிடையே நிலவி வரும் பாசப்பிணைப்பை பற்றிய ஒரு குறுங்கதை.

வேஷ்ட்டியை மடிச்சிக்கட்டு - ஊரடங்கு காலங்களில் ஓய்வு

பெற்றவர்கள் எப்படி வீடுகளில் தங்களுடைய குடும்பத்தினரை சமாளிக்கிறார்கள் என்பது பற்றிய ஒரு நகைச்சுவை ததும்பிய ஒரு கதை

நிறைந்த நெஞ்சங்கள் - கண் எதிரே சில சம்பவங்கள் நடக்கும்போது, அதை கண்டு கொள்ளாமல் செல்லும் பலருக்கிடையில், பாதிக்கப்பட்ட நபருக்கு உதவி

செய்யும் ஒரு நடுவயது பெண் பற்றிய ஒரு கதை.

முதல் பரிசு மோகம் - ஊரடங்கு காலங்களில் வேறு வழியில்லாது வீடுகளுக்குள்ளேயே அடைந்து தவிக்கும் குழந்தைகளுக்கு மத்தியில் நடக்கும் ஒரு போட்டி பற்றிய ஒரு கதை.

நிலை மாறும் உலகில் - மூத்த குடிமக்கள் தங்களுடைய குழந்தைகளின் கவனிப்பில் வரும்

கால கட்டங்களில் அவர்கள் எந்தளவுக்கு உதாசீனமாக நடத்தப்படுகிறார்கள் என்பதை பற்றிய ஒரு கதை.

உள்ளம் ஒரு கோயில் - எண்பது வயதை நெருங்கி கொண்டிருக்கும் ஒரு மூதாட்டி தள்ளாத வயதிலும் உழைத்து நேர்மையாக தான் வாழ்க்கை நடத்துவேன் என்று மற்றவர்களுக்கு முன்னுதாரணமாக விளங்குகிற ஒரு கதை.

---:::   :::---



# தலையணை மந்திரம்

**மொட்டை** மாடியில் இப்பொழுதெல்லாம், தினமும் நடைப்பயிற்சி செய்வது என்பது பழக்கமாகி விட்டது. சொல்லப்போனால், வைரஸ் கெடுபிடிக்கு அப்புறம் தான் மொட்டை

மாடியை பற்றிய சிந்தனையே வந்தது. அப்படி ஒரு இடம் இருக்கிறதா என்று சிந்தித்து பார்த்ததே இல்லை. வீட்டு பெண்மணிகள் துணி துவைத்து விட்டு காயப்போடுவதற்கு படியேறி மொட்டை செல்வது உண்டு. சுமார் முப்பது குடித்தனங்கள் உள்ள அபார்ட்மெண்ட் அது. தரைதளத்தை தவிர்த்து மூன்று அடுக்குகள். அடுக்கு ஒன்றுக்கு பத்து வீடுகள். தரைத்தளம் வாகனங்கள் நிறுத்துவதற்கு ஒதுக்கப்பட்டது.

மொட்டை மாடி பெரிய இடம். கிட்டத்தட்ட கைப்பிடி சுவரை ஒட்டி நீளவாட்டில் நடந்து திரும்பி வந்தால், 150 அடி வரும். அப்படியும் நடைப்பயிற்சி செய்பவர் இருபதுக்கும் மேல் இருக்க மாட்டார்கள்.

ராஜாமணி வெளியில் நடைப்பயிற்சி செய்வதற்கு தயக்கம் இருந்ததால் வேறு வழியின்றி மொட்டை மாடியை தேர்ந்தெடுத்தார்.

"என்னங்க, மொட்டை மாடிக்கு தான் போகிறீங்க? ஆறு தலையணையை எடுத்து வெயிலில் காயப்போட்டு விட்டு வாருங்கள். 12 மணிக்கு நான் போய் எடுத்துகிறேன்" - மனைவி மஞ்சுளாவின் உத்தரவு கேட்டது.

கக்கத்திற்கு மூன்று என்று வைத்துக்கொண்டு, பூனை மாதிரி நடந்து படிகளில் ஏறத்தொடங்கினார். முதல் மாடியில் வசிக்கும்

முத்தரசுவின் பையன் - முருகேசன் - பத்து வயது இருக்கும். "க்ளுக்" என்று சிரிக்க ஆரம்பித்தான்.

"எதுக்குடா சிரிக்கிறே?"

"உங்க நடையை பார்த்து சிரிக்கிறேன்."

"என்னடா நடைக்கு குறை?"

"ஒன்னும் இல்ல அங்கிள்; ஒரு தலையணை கிழிஞ்சு, பஞ்சு வெளியே துருத்திக்கொண்டு இருக்கிறது."

பட்டென்று ஒரு பொறி தட்டியது. "இன்னெக்கி வசமாக வாங்கி கட்டவேண்டியது தான்".

"டேய், முருகா, கொஞ்சம் அங்கிளுக்கு ஹெல்ப் பண்ணுடா. தலையணை மொட்டைமாடிக்கு கொண்டு வந்து போடுடா."

"தரேன்; எவ்வளவு கட்டணம்?"

"கட்டணமா - ஏன்டா நான் என்ன பஸ் கண்டக்டரா?"

"அங்கிள்- ஓசி சமாச்சாரம் எல்லாம் கிடையாது."

"வாடா; சூடா கருப்பட்டி கலந்த கடுங்காப்பி தரேன்."

"அங்கிள், மேகம் ஒரு மாதிரி திரண்டு வருது. நானே தலையணையை காயப்போட்டு விட்டு கொண்டு வந்து தரேன்."

முத்தரசு ஒரு அலுவலகத்தில் பியூன் வேலை பார்த்து வந்தான். மூன்று

குழந்தைகள். குறைந்த சம்பளம். முருகேசன் மூத்த பையன். அடுத்தாற்போல் ஒரு பையன்; கடைசியாக ஒரு பெண் குழந்தை. சம்பளம் குறைவு என்றாலும் அடுத்தவரிடம் சென்று கடன் கேட்க மாட்டான். அலுவலகம் தவிர, சாயந்திரம் ஆறு மணியிலிருந்து பத்து மணி வரை ஒரு ஹோட்டலில் வேலை பார்த்து சொற்ப பணம் கொண்டு வருவான். இந்த வைரஸ் பிரச்சினை வந்தது. ஹோட்டல்கள்

மூடப்பட்டுவிட்டன. அந்த வருமானமும் போய் விட்டது. சம்பளம் மட்டும் வந்து கொண்டிருக்கிறது. வருமானம் மிகவும் குறைவு என்பதால் குழந்தைகளுக்கு நல்ல சாப்பாடு கிடையாது.

அபார்ட்மெண்ட் விழாக்களில் முத்தரசு அதிக ஈடுபாடுடன் வேலை செய்வான். அவனை விட

அவனுடைய மூத்த பையன் முருகேசன் நன்றாக செய்வான். வறுமை என்றாலும் பிறருக்கு உதவிகள் செய்வதில் தகப்பனும், மகனும் தலை நிமிர்ந்து வேலை செய்வார்கள். குடியிருப்பில் வசிப்பவர்களுக்கு இவர்கள் இருவரும் ஒரு பெரும்பலம். இருந்தாலும், மனமுவந்து தானாக உதவி செய்ய விரும்புபவர்கள் மிகவும் குறைவு.

ராஜாமணி இந்த விஷயத்தில் எந்த குறையும் வைக்கமாட்டார். அவருடைய மனைவியும் அதே மாதிரி தான்.

ஒரு வாரத்திற்கு முன்னால் - ராஜாமணியும், அவருடைய மனைவியும் மொட்டை மாடியில் மாலை ஆறு மணியளவில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். நோய் எதிர்ப்பு சக்தியை கூட்ட வேண்டி மல்லி, சுக்கு, கருப்பட்டி கலந்த கடுங்காப்பியை பற்றி பேசிக்கொண்டே

இருவரும் அருந்திக்கொண்டிருந்தனர். அவர்களின் பின்புறம் முருகேசன் புத்தகம் படித்துக்கொண்டிருந்தான்.

திடீரென்று முருகேசன் கேட்க ஆரம்பித்தான்

"அங்கிள், மல்லி கலந்த கருங்காப்பி உடம்புக்கு நல்லதா அங்கிள்?"

"நல்லது; நோய் வராமல் தடுப்பதற்கு தினமும் இரண்டு வேளை குடித்தால் நல்லது." சொல்லி முடித்தபின்னர், ராஜாமணி பல்லை

கடித்துக்கொண்டார். “"இவன் எங்கே போய் காபி குடிப்பான்?".

அன்றிலிருந்து ஏதாவது ஒரு காரணத்தை உருவாக்கி அவனுக்கு கடுங்காப்பி கொடுப்பதை வழக்கமாக்கி விட்டார் ராஜாமணி.



## 02

# வேஷ்ட்டியை மடிச்சிக்கட்டு

**ஊரடங்கு** என்று மாதக்கணக்கில் வீட்டில் அடைந்து கிடப்பது தவிர்க்க முடியாத ஒரு சுமையாகி விட்டது. எங்கும் செல்ல முடியவில்லை. கடைத்தெருவுக்கு மட்டும் செல்ல

முடிகிறது. அதுவும் முன்னே மாதிரி முடியவில்லை. முகமூடி அணிந்து சமூக இடைவெளி கடைபிடிக்கவேண்டியிருக்கிறது.

கணேசன் விடியற்காலம் ஆறு மணிக்கு எழுந்து வீட்டின் அருகில் உள்ள தெருக்களில் நடை பயிற்சி மேற்கொண்டு வந்து கொண்டிருந்தார். அரை மணி நேரம் பயிற்சி; அதன் பிறகு அன்றைய தின பத்திரிகைகள்

வாசிப்பு; காலை டிபன்; அதன் பிறகு வீட்டில் உள்ள வேலைகள்.

அன்று இவராகவே, முன் வந்து, சமையல் பாத்திரங்கள் கழுவித்தருவதாக வாக்குறுதி கொடுத்து விட்டார். ஊரடங்கு என்பதால், வேலைக்காரியை இவர்கள் அனுமதிக்கவில்லை. அதனால் வேலைகளை பகிர்ந்து செய்யவேண்டியிருந்தது.

வீட்டில் கணேசன், அவருடைய மனைவி அம்சவல்லி, மகன் மகேஷ் மற்றும் மகள் மாதவி என்று நான்கு நபர்கள் வசித்து வந்தனர். பாத்திரங்கள் கழுவுவது என்று வந்து விட்டால், ஒன்று கணேசன் செய்யவேண்டும் அல்லது அவருடைய மனைவி செய்யவேண்டும். மகனோ அல்லது மகளோ எட்டிபார்ப்பது கூட கிடையாது.

வாஷிங் மெஷினில் போட்ட துணிகளை எடுத்துக்கொண்டு அம்சவல்லி மொட்டை மாடியில் காயப்போட சென்று விட்டார். மேகம் திரண்டு வருவதால், அடுத்த மூன்று மணி நேரத்திற்குள்ளாக துணிகளை வீட்டிற்குள் கொண்டு வந்து விடவேண்டும்.

வேஷ்ட்டியை மடித்துக்கொண்டு அடுப்பங்கரையில் கணேசன் உள்ளே

நுழையவும், மகள் மாதவி குரல் கொடுக்கவும் சரியாக இருந்தது. "அப்பா, கல்லூரிக்கு கட்டணம் கட்டவேண்டும் என்று மெய்யில் அனுப்பியிருக்கிறார்கள். இன்று எப்படியாவது ரூபாய் 25000 தயார் செய்து விடுப்பா".

உத்தரவு கொடுத்துவிட்டு, அவள் தனது அறைக்குள் சென்று கதவை தாழிட்டுக்கொண்டு, ஆன்லைன் வகுப்பிற்கு சென்று விட, குளித்து விட்டு

தலையை துவட்டிக்கொண்டே வந்த மகேஷ் அடுப்பங்கரையில் ஒரு ஆண் மகன் இருப்பதை கண்டு சிரித்துக்கொண்டான்.

"டாட், ஆல் தி பெஸ்ட்; உங்க சமையல் தான் இன்னெக்கி. எங்களை அதிகம் ரிஸ்க் எடுக்கவைச்சுடாதீங்க. "

சொல்லிவிட்டு தனது அறைக்குள் செல்ல முயற்சித்தவன், திரும்பிவந்து ஆரம்பித்தான் - "அப்படியே டாட், எனக்கு

சுக்கு, மல்லி கலந்த கடுங்காப்பி போட்டுக்கொடுங்க. நோய் எதிர்ப்பு சக்தி கூட்டுவதற்கு மிகவும் நல்லதுன்னு என்னுடைய டாக்டர் நண்பன் நவீன் நேத்திக்கு போன் பண்ணி சொன்னான்."

வேலை கூடிக்கொண்டே போக ஆரம்பித்தது.

"முதலில் சுக்கு எப்படி இருக்கும் என்பதை தெரிஞ்சிக்கணும்; மல்லி எந்த டப்பாவில் இருக்குதுன்னு தெரியல்ல. காபிக்கு வெள்ளை சர்க்கரை

போடலாமா அல்லது பனங்கற்கண்டு போடலாமா அல்லது கருப்பட்டி போடலாமா?"

குழம்பிப்போன கணேசன் வெளியே வந்து ஒரு பழைய நோட்டுப்புத்தகத்தையும் ஒரு பேனாவையும் கொண்டு வந்து வைத்துக்கொண்டார். எழுத ஆரம்பித்தார்.

"முதலில் ஒரு பாத்திரத்தில் வேண்டிய அளவு தண்ணீர் ஊற்றிக்கொள்ளவேண்டும். சுக்கை தேடி எடுத்து, அதை ஒரு சுத்தியால் பொடியாக்கி கொள்ளவேண்டும். (இப்பொழுது சுத்தியல் தேடி வைக்கவேண்டும்) ஓரளவு மல்லி எடுத்து வைக்கவேண்டும், அதை புடைத்து தூசியை நீக்க வேண்டும். அதன் பிறகு பாத்திரத்தில் உள்ள தண்ணீரில் பொடித்த சுக்கையும், சுத்தம் செய்த மல்லியையும் போடவேண்டும்.

பனங்கற்கண்டு எடுத்து பொடித்துக்கொள்ளவேண்டும். அதனை சுத்தம் செய்த பின்னர், இந்த கலவையுடன் சேர்க்கவேண்டும். இப்பொழுது இந்த கலவையுடன் கூடிய தண்ணீரை சுடவைக்கவேண்டும்."

மீண்டும் ஒரு முறை படித்த பின்னர், வேலையை ஆரம்பித்தார் கணேசன். சுக்கை பொடிக்க வந்தவர் கையில் சுத்தியலை போட்டுவிட, ரத்தம் வர

ஆரம்பிக்க, வெளி அறைக்கு வந்து டெட்டால் கலந்த பஞ்சு கொஞ்சம் விரலில் சுற்றி வைத்தார். திரும்பி வந்து வேண்டிய ஒரு பாத்திரத்தை தேடி எடுத்து அதை கழுவ ஆரம்பித்தார். ஒரு வழியாக கடுங்காப்பி தயாராகி வரவும், அம்சவல்லி அவரை முறைத்து பார்த்து கொண்டு நிற்கவும் சரியாக இருந்தது.

"போதும் நீங்க கடுங்காப்பி போட்ட லட்சணம். இரண்டு மணி நேரம் ஆகியிருக்கு. இனி எப்ப பாத்திரம் தேய்ச்சு, சோறு பொங்கி, குழம்பு வைச்சி சாப்பிடுறது. பேசாம, ஆன்லைன் சாப்பாடு இன்னெக்கி வைச்சிக்கிடலாம்”.

வேஷ்ட்டியை இறக்கிக்கொண்டு வெளியே வந்தார் கணேசன்.

---::: :::---

# 03

# நிறைந்த நெஞ்சங்கள்

**இரவு** மணி எட்டு. மழை வருகின்ற மாதிரியான ஒரு கிளைமேட். இன்று அதிக நேரமாகி விட்டது. ஒரு வாடிக்கையாளருக்கு அடுத்த நாள் பத்திரப்பதிவுக்கு தேவையான ஒரு டாக்குமெண்ட் தயாரிப்பதற்கு அதிக நேரம் ஆகிவிட்டது. அந்த

வாடிக்கையாளரை மாலை ஐந்து மணிக்கு வரச்சொன்னதுக்கு, அவர் கிட்டத்தட்ட ஏழு மணியளவில் வருகிறார். என்ன செய்ய? இவரை தவிர்த்து கடையை மூடிவிட்டால் 600 ரூபாய் வருமானமும் கிடைக்காமல் போய் விடும். இன்றைக்கு இவரை விட்டால் வருமானம் வெறும் 100 ரூபாய் மட்டும் தான்.

வேளச்சேரி பேபி நகர் பேருந்து நிறுத்தத்திற்கு வேக வேகமாக நடந்து கொண்டிருந்தாள், நவீனா. வயது கிட்ட்டத்தட்ட நாற்பது ஆக போகிறது. பள்ளிக்கரணை செல்லவேண்டும். இன்று பார்த்து இரு சக்கர வாகனம் தகராறு செய்து விட்டது. வேளச்சேரியில் ஒரு DTP நிறுவனம் தொடங்கி இரண்டு வருடங்கள் ஆகிவிட்டது. ஆரம்பத்தில் அந்த கடையில் இவள் வேலை பார்த்து கொண்டிருந்தாள். கடை

முதலாளி கடையை விற்கப்போகிறேன் என்று சொன்னவர், போகும்போது இவளுக்கு சொற்ப விலையில் பொருட்களை கொடுத்துவிட்டு கேரளா சென்று விட்டார். இவளுக்கு துணையாக ஒரு பையன். அவனும் இன்று வரவில்லை. லேசாக குளிர் வருவது போல இருந்தது. தூரத்தில் ஆந்தையின் குரல் கேட்டது.

இரவு எட்டு மணிக்கு மேல் பேருந்துகள் அதிகம் கிடையாது. மனது திக் திக்கென்று அடித்துக்கொண்டது. பேருந்து நிறுத்தத்தில் ஒரே ஒரு பெண் மட்டும் அமர்ந்து இருந்தாள் . வயது பதினெட்டு இருக்கும். தாவணி அணிந்திருந்தாள். குளிருக்காக தாவணியால் முக்காடு போட்டுக்கொண்டிருந்தாள். சிறிது தூரத்தில் நான்கு வாலிபர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் இந்த பெண்ணை பார்த்துக்கொண்டிருந்த

பார்வை சரியாக இல்லை. நவீனாவுக்கும் ஒரு மகள் இதே வயதில் இருக்கிறாள். நவீனாவுக்கு ஒரே குழப்பமாக இருந்தது.

"ஏதோ ஒன்று நடக்கப்போகிறது" என்று மனது சொல்லியது. அந்த வாலிபர்களின் பார்வையை இந்த சிறிய பெண் புரிந்து கொண்டாளா என்பது தெரியவில்லை.

இதற்கிடையில் ஒரு ஷேர் ஆட்டோ வரவும், நவீனா அதில் ஏறவும் சரியாக இருந்தது. அதிக நேரம் ஆகி விட்டதால், நூறு ரூபாய்க்கு சவாரி வருகின்ற ஆட்டோக்காரரர் 150 ரூபாய் வேண்டும் என்று கேட்டார். போட்டி போட்டுக்கொண்டு வந்த வேறு ஒரு ஆட்டோக்காரரர் 200 ரூபாய் கேட்கவும் பேரம் பேசுவதை விட்டு விட்டு 150 ரூபாய் தர ஒத்துக்கொண்டு விட்டாள். ஆட்டோ கிளம்ப தயாரானதும் சட்டென்று ஒரு சத்தம் கேட்டது. அந்த

பெண்ணை நெருங்கிய வாலிபர்கள் பெண்ணை கீழே தள்ளி விட்டு பெண்ணிடம் இருந்த கைப்பையை பிடுங்கிக்கொண்டு ஓடுவதை நவீனாவினால் பார்க்க முடிந்தது. அந்த பெண் கீழே விழுந்து கிடந்தாள். நவீனா வேகமாக இறங்கி பார்த்தபோது, தலையில் அடிபட்டு ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

"நமக்கு எதுக்கம்மா இந்த வம்பு?" என்று ஆட்டோக்காரர் சொல்ல, அவள் அதை

கண்டு கொள்ளாமல் அந்த பெண்ணை மெதுவாக தனது தோளில் சாய்த்து ஆட்டோவில் ஏற்றிக்கொண்டாள். வேளச்சேரி விஜயநகர பேருந்து நிலையத்தின் அருகில் உள்ள ஒரு கிளினிக்கில் அந்த பெண்ணை காண்பித்து தலையில் கட்டுபோட்டுவிட்டு, கவுண்டரில் 150 ரூபாய் தந்து விட்டு மீண்டும் ஆட்டோவில் ஏறினாள். அதே பெண்ணும் பள்ளிக்கரணை போகவேண்டியவள் என்று அறிந்து

அவளை அவளுடைய வீட்டில் இறக்கி விட்டு விட்டு, கிட்டத்தட்ட பத்து மணியளவில் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள் நவீனா.

தன்னுடைய கடைக்கு வந்த வாடிக்கையாளர் மிகவும் தாமதமாக வருவதாக நான்கு மணி நேரம் முன்பு புலம்பிக்கொண்டிருந்த நவீனாவுக்கு ஆட்டோ ஓட்டுனரின் நிலைமை புரிந்தது. அவர் எந்தளவிலும்

பாதிக்கக்கூடாது என்று நினைத்தவள், கைப்பையை திறந்து பேசிய தொகைக்கு மேல் 100 ரூபாய் அதிகம் தந்தாள்.

ஆட்டோவில் இருந்து இறங்கி வீட்டு வாசலை நோக்கி நடக்கவும், "அம்மா" என்று ஆட்டோக்காரர் கூப்பிடவும் சரியாக இருந்தது. நவீனாவின் கையில் 100 ரூபாய் திருப்பி தந்த அவர் சொன்னார்.

"அம்மா இந்த பணம் உங்களிடம் இருந்தால் பிறருக்கு உதவி செய்ய பயன்படும்", என்று சொல்லிவிட்டு ஆட்டோவில் ஏறி விரைந்தார் அவர்.

---::: :::---

# 04

# முதல் பரிசு மோகம்

**இந்த** வைரஸ் பிரச்சினை வந்தது தான் வந்தது - பெரியவங்க பாடு பரவாயில்லை. அப்படியே "நான் காய்கறி வாங்க போகிறேன்; பால் வாங்க போகிறேன்” ன்னு சொல்லிக்கிட்டு ஒரு நாளைக்கு ஒரு முறையாவது வீட்டிற்கு வெளியே போய் சுற்றி நடமாடும் மனுஷங்களை

ஒரு லுக் விட முடியுது. சிறிய குழந்தைகள் என்ன செய்வார்கள்? ஓடியாடி விளையாட வேண்டிய வயசு. அவர்களை வீடுகளுக்குள் வலுக்கட்டாயமாக கட்டி போட்ட மாதிரி இருக்குது.

மொட்டை மாடி இருக்கிற வீடுகள் பரவாயில்லை. குழந்தைகள் நடை பயிற்சி செய்வது; பாண்டி விளையாடுவது என்கிற அளவுக்கு

உடலுக்கு சில பயிற்சிகள் செய்ய முடிகிறது.

குழந்தைகள் தினமும் ஒரு போட்டி வைத்துக்கொண்டார்கள். அந்த அபார்ட்மெண்டில் இருபது வீடுகள். பத்து - பதினைந்து வயசு குழந்தைகள் கிட்டத்தட்ட பத்து நபர்கள். இவர்களை எல்லாம் மானிட்டர் செய்கின்ற வேலை தான் ரேவதிக்கு கொடுக்கப்பட்டிருந்தது.

இருபத்தியொன்று வயது. குழந்தைகளுடன் விளையாடுவது மிகவும் பிடிக்கும். இப்பொழுது வீட்டில் இருந்து வேலை செய்து வந்ததால், மாலை ஆறு மணிக்கு வேலையிலிருந்து வெளியேறி விடுவாள். அதன் பிறகு இரவு ஒன்பது மணி வரை குழந்தைகளுடன் விளையாடுவது அவள் வழக்கம். ஆனால் விளையாட்டு என்று சொல்ல முடியாது. தினமும் விளையாட்டு

மூலம் ஒரு பாடம் என்று சொல்லலாம்.

அன்றைய தினத்தின் போட்டி - "ஆந்தை" மாதிரி நடித்துக்காட்டுவது. மழை காலம் தொடங்க ஆரம்பித்ததால் மொட்டை மாடியில் சிறிது குளிர் இருக்கத்தான் செய்தது. ஆந்தை என்றால் முகத்தை மட்டும் தான் ஆந்தை மாதிரி

வைத்துக்கொள்ள முடியும். உடலை எப்படி மாற்றுவது?

வனிதா - பத்து வயது; ஆறாவது வகுப்பிற்கு செல்லவேண்டியள். பள்ளி திறக்கவேண்டும் என்று தவம் இருக்கும் குழந்தைகளில் இவளும் ஒருவள். பாடங்கள் ஒரு பக்கம் இருக்கட்டும்; உடன் படிக்கும் நண்பர்கள் இல்லாதது அவர்களுக்கு எதையோ இழந்தது போல இருந்தது.

இதுவரை நடந்த இருபது போட்டிகளில் வனிதாவுக்கு ஒன்றில் கூட பரிசு கிடைக்கவில்லை. இந்த ஆந்தை போட்டியில் எப்படியாவது பரிசு வாங்கி விடவேண்டும் என்று ஒரு வெறி அவளுக்கு வந்தது.

"அம்மா எனக்கு ஆந்தை போட்டிக்கு எப்படி நடிப்பது என்று சொல்லி கொடும்மா?' என்று அம்மாவிடம் கேட்க, "எனக்கு நேரம் இல்லையடி" என்று சொல்லிவிட்டு, யூடுப்பில் வெளிவந்த

ஒரு சமையல் குறிப்பை மும்முரமாக பார்த்துக்கொண்டிருந்தாள் அம்மா.

"அப்பா நீயாவது, சொல்லிக்கொடுப்பா" என்று அப்பா ஆனந்தனிடம் கேட்க அப்போது தான் சின்னத்திரையில் ஒரு முக்கிய சீனில் மூக்கை நுழைத்துக் கொண்டு பார்த்துக்கொண்டிருந்த அவர், "முடியாது" என்று சைகை காட்டி விட்டார். வனிதாவுக்கு அழுகை அழுகையாக வந்தது.

மொபைலில் ஒரு படம் பார்த்துக்கொண்டிருந்த அண்ணன் அமுதன் அருகில் வந்து உதவி செய்வதாக வாக்கு கொடுத்தான்.

அவனுடைய திங்க் டேங்க் வேகமாக வேலை செய்ய ஆரம்பித்தது. அவனுக்கு இந்த மாதிரி காரியங்கள் செய்வது மிகவும் பிடிக்கும். விறு விறுவென்று பழைய பாண்ட் ஒன்றை எடுத்தான். முகம் வருகிற மாதிரி ஒரு

துண்டை உருவாக்கினான். அதில் இரண்டு பக்கமும் இரண்டு கண்கள் வருமாறு ஓட்டைகள் போட்டான். அந்த ஓட்டைகளை சுற்றி வெள்ளை ஸ்கெட்ச் பேனாவினால் கோடுகள் வரைந்தான். தண்ணீர் பாட்டிலை கத்தியால் வெட்டி புடைப்பான மூக்கு தயார் செய்தான். அதற்கும் வெள்ளை கலர் அடித்தான். அதை துணி முகத்தில் பெவிகால் கொண்டு ஒட்டினான். முகத்தின் இருபக்கத்திலும் சிறு ஓட்டைகள்

போட்டு மாஸ்க் மாதிரி கயிறுகள் கட்டிவிட்டான். முகம் தயார்.

உடலுக்கு என்ன செய்வது?

தாவணியை கையில் எடுத்தவன் மனம் மாறி வனிதாவை நிற்கவைத்து வேஷ்ட்டியை அவளை சுற்றி பஞ்சகச்சரம் மாதிரி கட்டி விட்டான். அப்பாவின் பழைய கோட் ஒன்றை எடுத்து அவளுக்கு மாட்டி விட்டான். இப்பொழுது ஆந்தை போட்டி மைதானத்திற்குள் நுழைந்தது. அமுதன்

மெதுவாக சென்று தனது மொபைல் ஸ்பீக்கரை தட்டி விட, அதிலிருந்து ஆந்தையின் குரல்  வர ஆரம்பித்தது.

வனிதாவின் ஆந்தை உடல் மொழியும், பின்புலமாக வந்த ஒலியும் எல்லோரையும் கவர, வனிதா தனது முதலாவது பரிசை வாங்கிக்கொண்டாள்.

**---:::   :::---**

# 05

## நிலை மாறும் உலகில்

தனி ஆவர்த்தனம் என்று வரும்போது தனஞ்செயன் என்ற பெயர் தான் கச்சேரி நடத்துபவர்களுக்கும் தவறாமல் கச்சேரிகள் செல்பவர்களுக்கும் தெரியும். வயது என்னவோ 70 ஆகி விட்டது. சில சமயங்களில் சுருதி பிறழுவதாக போனில் தகவல்கள்

தெரிவிக்கிறார்கள். இருந்தாலும் அவருக்கென்றே ஒரு ரசிகர் குழாம் இருக்கிறது. தபேலா தனஞ்செயன் என்ற செல்லப்பெயரும் உண்டு அவருக்கு. தபேலாவின் எல்லா பகுதிகளிலும் அவரது கைத்தடம் இருக்கும்.

அன்று சனிக்கிழமை இரவு மணி 10.00. அவருக்கென்றே ஒதுக்கப்பட்ட படுக்கையறையில் இங்கும் அங்கும்

நடந்து கொண்டு இருந்தார். அவருக்கு ஒரே மகன். அவனுக்கு திருமணம் செய்து கொடுத்து இரண்டு குழந்தைகள் இருக்கிறார்கள். மருமகள் படித்த பெண். ஆனால் பண்பாடு தெரியாதவள். அவளை புரிந்து கொள்வதே சில சமயங்களில் சிரமம் தான்.

தனஞ்செயனின் வருமானம் என்பதே கச்சேரியில் இருந்து வந்தது தான்.

வாழ்க்கையில் கச்சேரி செய்வதை தவிர வேறு ஒன்றையும் அவர் கற்றுக்கொள்ளவில்லை. அந்த வருமானத்தில் படித்து வளர்ந்து இன்ஜினியரிங் முடித்து சென்னையில் ஒரு IT கம்பெனியில் மாதம் 50000 ரூபாய் சம்பளத்தில் வேலையில் இருக்கிறான், அவரது மகன் மாதவன். திருமணத்திற்கு முன் வேலைக்கு சென்று கொண்டிருந்த மருமகள், இரண்டாவது குழந்தை பிறந்ததுமே வேலையில் இருந்து

நின்று விட்டாள். தனஞ்செயனின் மனைவி இறந்து ஏழு வருடங்கள் ஆகிவிட்டன.

கச்சேரியில் பங்கு பெறுவது என்றால் தனஞ்செயனுக்கு ஒரு வெறி என்று தான் சொல்லவேண்டும். மகன் மாதவன் பலமுறை சொல்லியிருக்கிறான்.

"நீங்கள் நிறுத்திக்கொள்ளுங்கள். வயது ஆகி விட்டது. பிள்ளைகளை பள்ளிகளுக்கு கொண்டு சென்று விட்டு பிறகு கூட்டிக்கொண்டு வந்தாலே போதும்."

மருமகள் மாதவி இதற்கு நேர்மாறானவள். என்னவோ தெரியவில்லை; சில நாட்களாக அவளுக்கு தனஞ்செயனை கண்டாலே பிடிப்பதில்லை. இத்தனைக்கும்

தனஞ்செயன் எந்தவித தொந்தரவும் கொடுப்பதேயில்லை. தனது ஆரோக்கியத்தை நன்றாக வைத்துக்கொள்ளுவதில் அவர் கை தேர்ந்தவர்.

அரசு உத்தியோகம் என்றால் பென்ஷன் வரும். அதனால் அவர்களுக்கு கொடுப்பதற்கு என்று பணம் எதுவும் கைவசம் இல்லை. கச்சேரி சென்று வரும்போது கிடைக்கும் வருமானத்தை

அப்படியே கொடுத்துவிடுவார். சில சமயங்களில் பணம் வாங்காமலே கச்சேரி செய்து விட்டும் வருவார். இது மாதவிக்கு கொஞ்சம் கூட பிடிப்பது இல்லை.

குங்குமம் வைத்துக்கொள்ளும் பழக்கம் அவருக்கு உண்டு. அலமாரியில் உள்ள முகக்கண்ணாடியில் தனது முகத்தை பார்த்து அதை சிறிது சரி செய்து கொண்டார். அருகில் இருந்த காலண்டர்

கண்ணில் பட்டது. அதில் ஒரு மயிலிறகு செருகியிருந்தது. 22ந்தேதி ஞாயிற்றுக்கிழமை. வேளச்சேரி சபாவை சார்ந்தவர்கள் ஒரு கச்சேரியை ஏற்பாடு செய்துவிட்டு அவரை வருமாறு அழைத்திருந்தார்கள். முந்தின தினம் உடல் நிலையை காரணம் காட்டி அதை கான்செல் செய்திருந்தார்.

காலண்டரை பார்த்துக் கொண்டிருந்தவர் காதுகளில் அடுத்த அறையில் நடந்து கொண்டிருந்த காரசாரமான விவாதம் கேட்டது. இதில்

அவருடைய பெயர் அடிபட்டது அவருடைய ஆர்வத்தை தூண்டிவிட்டது.

"என்னங்க; இதுக்கு மேலேயும் உங்க அப்பாவை வைத்து பார்க்க எனக்கு முடியாதுங்க; நங்கநல்லூரில் ஒரு முதியோர் இல்லம் பார்த்து வைச்சிருக்கேன். நாளைக்கு அவரை அங்கு கொண்டு சேர்த்திடுங்க" - மாதவி பேசுவது கேட்டது.

"கண்டிப்பா அவரை அங்கு கொண்டு விடணும்னு சொல்றியா?" - மாதவன்.

"ஆமாங்க; அவர் இங்கு இருந்தால் நான் இனிமே இங்கு இருக்கமாட்டேன்"- மாதவி பிடிவாதமாக பேசினாள்.

"சரி, நாளைக்கு ஒரு நாள் பொறுத்துக்கொள். திங்கள் கிழமை சேர்த்துடுறேன்" - மாதவன்.

ஞாயிற்றுக்கிழமை. சட்டென்று மாலை ஆறுமணியளவில் சபாவிலிருந்து கார் வர, கான்செல் செய்த கச்சேரிக்கு

சென்று வாசித்து விட்டு இரவு திரும்பி வந்த தனஞ்செயன் கையில் சுளையாக இருபதாயிரம் இருப்பதை பார்த்ததும் மாதவிக்கு ஒன்றும் ஓடவில்லை. எப்படியாவது மாமனாரை வீட்டில் இருக்கச்சொல்லவேண்டும் என்று நினைத்தவளுக்கு தனஞ்செயனின் குரல் கேட்டது.

"மாதவா- இந்த பணம் எனக்கு தெரிந்த முதியோர் இல்லத்திற்கு கொடுக்கப்போகிறேன். நானும்

இனிமேல் அங்கு தங்க போகிறேன். முடிந்தவரைக்கும் கச்சேரிகளுக்கு சென்று வரப்போகிறேன். கச்சேரியில் எனக்கு கிடைக்கும் பணம் முதியோர் இல்லத்திற்கு கண்டிப்பாக உதவியாக இருக்கும்."

மாதவி செயலற்று நின்று கொண்டிருந்தாள்.

---::: :::---

## 06

# உள்ளம் ஒரு கோயில்

கொரான ஊரடங்கு வந்ததில் இருந்து எதை செய்வது என்பதே தெரியாமல் தான் இருக்கிறது. மார்ச் மாதம் தொடங்கி மே மாதம் வரை அரசு அறிவித்திருந்த ஊரடங்கில் மாத சம்பளம் வாங்குபவர்களும், வசதியானவர்களும் தேவைக்கு தகுந்தவாறு பொருட்களை

வாங்கிவைத்துக்கொண்டு வீடுகளில் நேரத்தை போக்குவதற்கு வழி வகைகளை தேடிக்கொண்டு இருந்த காலங்களில், அடுத்த வேளை சோறுக்கு என்ன செய்வது என்பது தெரியாமல் விழித்துக்கொண்டிருந்தவர்கள் ஏராளம்.

எந்த சூழ்நிலை வந்தாலும், உழைத்தே உண்பேன் என்று தன்மான உணர்வில் வாழ்ந்து கொண்டிருந்தவர்களுக்கும் இந்த வைரஸ் ஒரு பாடம் தந்து விட்டது.

வேளச்சேரி தெரு ஒன்றில் வழக்கமாக நடை பயிற்சி செய்து கொண்டு இருந்தவர்களில் ஒருவன் ரமேஷ். அன்று காலை ஆறு மணியளவில் இன்னும் இருள் விலகாத நிலையில் தனது கால்களில் ஷூக்களை மாட்டிக்கொண்டு நடை பயிற்சி செய்து கொண்டிருந்தான். அந்த நேரத்தில் அந்த தெரு வெறிச்சோடி தான் இருக்கும். அந்த காலை நேரத்தில், நடைப்பயிற்சி செய்பவர்களை தவிர கோயம்பேடு மார்க்கெட்டில் இருந்து காய்கறிகள்

வாங்கி வந்து தெரு ஓரத்தில் கடை விரிப்போர், பூ வியாபாரம் செய்வோர், பால் வியாபாரம் செய்வோர் இவர்களை தவிர வேறு யாரையும் பார்க்கமுடியாது.

அந்த தெரு முனையில் இருந்தது அந்த கடை. அந்த கடையை தாண்டித்தான் சென்றாக வேண்டும். கிட்டதட்ட இரண்டு வருடங்களாக அந்த கடையை தாண்டித்தான் இவன் போய் கொண்டிருந்தான். கடந்த இரண்டு மாத

காலமாக ஊரடங்கு இருந்த காரணத்தால் வீட்டிலேயே பயிற்சி செய்து கொண்டிருந்தான். அந்த கடையின் அருகில் அவன் பார்த்திருக்கிறான். ஒரு மூதாட்டி - கிட்டத்தட்ட வயது 70 இருக்கும். ஐந்து மணிக்கே வந்து கடையை திறந்து வைத்துக்கொண்டு காய் கறிகளை விற்றுக்கொண்டிருப்பார். வெயில் வந்தவுடன் காலை ஒன்பது மணி வரையில் வியாபாரம் செய்து விட்டு அதன் பிறகு வீட்டிற்கு சென்று விடுவார்.

வியாபாரம் இல்லாத நேரத்தில் தென்னை கீற்றுகளை வைத்து துடைப்பங்கள் தயாரித்துக்கொண்டு இருப்பார்.

நடை பயிற்சி முடித்துவிட்டு திரும்பி வரும்போது, அந்த கடையில் தான் அவனுக்கு வேண்டிய காய்கறிகள் வாங்கிவிட்டு வருவான். அவன் ஒரு தனிக்கட்டை. சொந்த சமையல் தான். அந்த மூதாட்டிக்கு கொஞ்சமாவது

தன் மூலம் பணம் கிடைக்கவேண்டும் என்றே வேறு எங்கும் வாங்காமல் அங்கு மட்டும் தான் காய்கறிகள் வாங்குவதை வழக்கமாக கொண்டிருந்தான். அவன் மனதை என்னவோ செய்தது.

"கடந்த இரண்டு மாதங்களை அந்த மூதாட்டி எப்படி சமாளித்திருக்கும்? வியாபாரம் இல்லாமல் பணம் எப்படி வந்திருக்கும்? இவ்வளவு நாட்கள் பொருட்கள் வாங்கிக்கொண்டிருந்த

நான் இதுவரை அந்தம்மாவை பற்றி சரியாக தெரிந்து கொள்ளவேயில்லேயே. "

கனத்த சிந்தனையால் அவனால் அன்று சரியாக பயிற்சி செய்ய முடியவில்லை.

திரும்பி வரும்போது, அந்த மூதாட்டி அமர்ந்திருந்தாள். கடையை ஒட்டிய பின்புற சுவற்றில் ஒரு காலண்டர். அதில் ஒரு மயிலிறகு செருகி இருந்தது. அவன் கடையை நெருங்கும்போது

அருகில் இருந்த சாமி படத்திற்கு குங்குமம் வைத்துக்கொண்டிருந்தாள் அந்த மூதாட்டி.

கடையின் முன் இவன் நிற்கவும், அந்தம்மா இவனை பார்த்து புன்னகை செய்யவும் சரியாக இருந்தது. "எப்படி அம்மா இருக்கீங்க?"

"நல்ல இருக்கேன்யா; நீங்க எப்படி இருக்கீங்க?"

ஊரடங்குக்கு முன் ஒரு நாள் காய்கறி வாங்கிவிட்டு 400 ரூபாய் பாக்கி வாங்காமல் சென்றது இவனுக்கு நினைவுக்கு வந்தது. "நாமாக கேட்கவேண்டாம்" என்ற முடிவோடு காய்கறிகளை பொறுக்க ஆராம்பித்தான்.

வேண்டிய காய் கறிகளை எடுத்துவிட்டு கைத்தடம் பதியக்கூடாது என்று ஒரு

வெற்றுத்தாளில் வைத்து ரமேஷ் 500 ரூபாய் கொடுத்து விட்டு "மீதியை நாளைக்கு அட்ஜஸ்ட் செய்துகொள்ளலாம்" என்று சொல்ல, வேண்டாம் என்று சொல்லிவிட்டு வேண்டிய 100 ரூபாய் எடுத்துக்கொண்டு மீதி பணத்தை திருப்பிக்கொடுத்தாள் அந்த மூதாட்டி. ரமேஷ் திரும்பவும், அந்தம்மா மீண்டும் கூப்பிட்டு "தம்பி ஊரடங்குக்கு முன் ஒரு நாள் 400 ரூபாய் பாக்கி வாங்காமல் சென்று விட்டீர்கள்" என்று சொல்லிவிட்டு தனது சுருக்கு

பையில் இருந்து அந்த பணத்தை எடுத்து கொடுக்கவும், விக்கித்துப்போய் நின்றான் ரமேஷ்.

---:::   :::---